இலைவளா வுற்ற வெலாமுணர்கிற்பன வேதின சேவையெனு
நிலைகொடு நிற்றியி தன்றியுமென் றனை நேர்தொழ வேண்டுதியேல்
உலைவற நேடுறு போதவ ணெய்துவ னுறுகென வோதலுமன்
தலையில் வணங்கி நகர்க்கணடைந்தன னிவர்தனி யேகினரோ. (௱௯௯)

வேறு.

ஏருங்கொடுவன மோவிம்மாவுலி யெனுமூ ரருக ரணியமெய்திப்
போகுங் கணநதி தீரந்தனிலொரு புறமேய் மரனொரு புடையேறி
ஆகும் பதியமர் சிறுபிள்ளைகளுட னணுகிக் கவிபயில் வதுபோலும்
வாகுங் கரமுடன் வாயுந்தெரிவுற மயல்செய் தயலுறு மரனேறி. (௱சும)

தாவிக்கிளைக ளுலாவித்தரைமிசை தத்திக்குதிபல தாஞ்செய்து
மேவித் திரிவுறு போதிற் சிறுமகர் மேல்வீ சுறுகலு மேலேற்று
மாவிற் புலிகரடிகள் கொண்டுறு சிறுமகர்மேல் விடலொடு மருள் செய்து
காவிற் கனிகளு நுகர் வுற்றவர் மிசை கற்போலுற வரிகவண் வீசி. (௱சக)

விளையாடினர் திரிவுறு நீள் செயல்களை விரலூரவர் தெரிவுறலாகிப்
பிளைமார் கடிவதின் மகிழ்வாயுறு மிவர் பிறழ்வானர முனரெனவே கொண்
டுளவார திசய மிவர் காலையின கரையம்பெற வருவது கண்டோர்
இளையானிவன்வயதிரு பானைந்துளனெவனே மிகவெழிலினிதுள்ளான். (௱சஉ)

இந்தச் சிறுவயதிடையே பித்திசை வினுறுயினனியல்வுறு ஜன்மம்
பந்தச் சிதைவது படலாயின தொரு பயனற்றெனை விகழ்பலபேச
முந்தக்கடி நகரிடையே பதிநொரு மூன்றிற்பெரு வனமுறையே கொண்
டிந்தப்படி திரியொரு நாளிடை யடையொரு மூன்றட்டனரிசைவாக. (௱சங)

அப்போதர சிவரைத் தேடிப் புடையணுகிக் கண்டடிகளில் வீழ்ந்து
செப்போகை யினுற மெய்த்தேசிகர் திருமாலுக் கோரடை சேர்வித்துத்
தப்போவியவடைதா மொன்றுண்டர சற்கோரடை தரவ்துகொண்டான்[முன்
கைப்போதிடை கொடுதுய்த்தானள வறுகளிகொண்டருள் விடைகொடு சென்

இந்தப் பித்தனனுக்கிரகம் பெற்றனனேயிவ[illegible] யென வெல்லோரும்
தொந்தத் திகழ்வுறலானூர் நனிசிறு சுதரோடு[illegible] விரவினர் வாயால்
அந்தத் தசரதசுதனுமஞ் சொலலொழியார் நனி விளையாடிச்சார்
சந்தப்பொழிலிடை யொருவன் னெறிகனுநன் மேலடிபடலுஞ் சோர்ந்தார். ()

தறைமேல் வீழ்ந்துயிர் போனூர் போல்வது தனையச்சிறுவர் கடாந்தேர் வுற்
றிறையேனும் முயிரிலதே நாசியிலெனவே வெருவினரிது தேர்ந்தால்
முறைசேர் நகரதிகாரன் றெறுகுவன் முனிவாய் நமையென முனல் செய்து
குறையா நதி மணலிடையே கொடுகுழி பறியாவதின் முழுகுதல் செய்தார். ()

குழியிற் புகவிவர்தமை மூடினர் செலவிறையோனருள் குருபரர் நாடிப்
பொழிலிற்குகை செறிமலையிற் பிறபல புடையிற் கண்டிலன் வருபோதில்
வழியிற் பதிகளாவின வுற்றிடவவர் யாரோமாய்திதனை நந்தர்
சுழியிற் செறிகண நதியிற்றுறு மணலிடையிற்றுன மன்றதொழில் செய்தார். ()

எனவே யெங்கெனலும் மாவுலி நகரிடையே யென்றனரது கேளா
வனமோவினன் வருபொழுதூர் தனிலுளர் மகரால்விளை தொழிலது தேர்ந்து
மனமேய் வெருவுடனெழு நாள் கழிவுறு சவமூளெரியிடைவதை செய்து
புனலேய்வது பொடிபுரிவோ முறையிறை புகுமுன்னிது புரியோமானல். ( )

தண்டம் பெறாது மிவரசாலென்றனர் தாம் யாவரு மறைவுற வந்து
மண்டம் மணலது தோண்டித் திருவடி வங்காண் பொழுதவர் மலிசத்தம்
கொண்டங்கெழுவது கொண்டோடினர் செறிகொடுமாவனமொலிகுரல்கேளா
விண்டங்குயிரிலர்போன் மூர்ச்சித்து விழுந்தார் தேறினர் மீண்டம்மா. (௱௪௯)

எழுநாளளவுறு மணலுட் புக்கவ னிறவான திருமி வொலியேதோ
வழுவாவிவனெவ னெனவே யதிசய மருவித் திருவவ தாரஞ்செய்
முழுவான வனிவனெனவே கினர்நகர் மூந்துற்றார் சிலர் மூடுகிப் போய்த்
தொழுதாரிறை வனையொருதே சிகராறும் வனமீதென்று சொலக்கேட்டான். ()

அரசன்களிகொடு தாயைத் தருவுறு மொருகன் றெனவவ ரகமேகிப்
பரசும் பரிவுட னடிசேவித் தவைபற்றிக் கொடுகுரு பரநாதா
விரசம் புரையில் விநாசா பக்தபரோ சாகதிதரு விமலாவென்
றுரை செய்திரு விழியுகு நீரிருபத முறுவித்துக் கழுவுதல்செய்தான் (௱௫௧)

உடனே யவனை யெடுத்தாகம் பதிவுறவே தழுவின ருறல் செய்தார்
திடமேவிய குருவரசன் சிறுவர்கள் செயன் மேவியது முணர்ந்தான் முன்
விடமேவினர் சொலவ திகந்தனதுள் வியந்தா னவர்சொலும் விடைகொண்டு
கடமே வுறவ முதட்டுத் தேசிக ருண்டே மிகுவது கடிதுண்டான். (௱௫௨)

சுருள் செய்தடையொடு பாகுந்தந்தடி தொழுதுன்ன கருறுகெனவேண்டக்
கருதும் படிவரு நாளுண்டன் றுனகர்க் கண்வருவெ னெனைத்தேடிப்
பெருகுந் துயரொழு நாளுற்றனை யதனாலே குதிநகர் பிறழாதென்
றருளும் விடைகொடு சென்றான கரரசன் றனிவர் வனமணு குற்றார். (௱௫௩)

அணுகுந் தினமதிலேதத்து வெனுமொரம் பட்டன் னவரரு குற்று
நணுகும் பவம் வினைபல பாசங்களு நாசஞ் செய்தொரு தனியேனுய்
நுணுகும் பொருளுணர் குருசேவை யிலுற நுனித்தெய்தின னடியே னென்று
கணுகும் புனலுற வடிசேவித் தெதிர் நின்றா னினைவது கண்டாராய். (௱௫௪)

சிலநாள் கழிவுற லாகத் தந்தனர் தீக்ஷைத் திருமகள் கோனுமம்
பலகாலும் பயிலுறுமா செய்தன ரவனவ்வாறு படிந்துற்றான்
நலனுர் தருமவநெறி சாதாருற நாடிக் கூயினர் கொடு சென்றேய்
தலனேர் கோசுறு புறமார் நலபுன றனிலாடினர் பலிதான் செய்தார். (௱௫௫)

திருமால் பூசனை செய்போதுடன் வருவோன் மிக்கது பசிதீர்தற்காம்
அருகார் சோளம தெனவே பிறர் பொருளாகா தென்றன ரதுகேளா
சுருள்ளார் கதிர்க ளொடித்தான் சிலகொடு நன்னிச் சுட்டன னுறுபோதில்
பெருகார் பயிருடையவ னேக்கிக் கடிதுற்றான் வாய்வரு படிபேசி. (௱௫௬)

கையிற் கொடுவரு கோலாற் சுடுகிற கள்ளன் றனை யுமவன்றன்னைக்
கொய்யப் புகவிடு வோனென்ற ரிபலிகொண் டுற்றேனைப் பனிசாடி
மெய்யிற் புடையுறவே செய்தேகினன் விமலத் தேசிகர் நகை செய்தார்
உய்யப் புகுமொரு தத்துக் குருபரருக் குற்றதினுள மூறநொந்தான். (௱௫௭)

தத்துப் படுதுயர் கண்டோர குபதிதா சானவரவன் முகநோக்கிக்
கொத்துத் துளவின னன்பர்க்கின் பொடுதுன்புஞ் சரியன கொல்லைக்கண்
முத்துக் கதிர்க ளொடிக்கும் போதுள சுகமே யுடையவன் மோதும்போ
தெத்துக் கித்துயர் படுகின்றா யெனவெதிர் நின்றடி தொழுதிது சொன்னான். ( )

ஒடித்தே னடிபட வுறுநீரடி படவுறு மோகுருபரனோ யென்ன
நொடித்தாரிச் செயல்யார்க்குந் தெரிவுற நுவலாதமை கெனவேதாசர்
தொடித் தோளரசனில் விடுத்தேதுரு வுறுதூதர்க் கவணிவருற நேர்ந்து
படித்தாரர சிடையொரு கோசுறு வழிபரதேசி கரணுகின னொன்றே. (௱௫௯)

வினவிக்களி கொடுவேந்தன் புரமணிகென வேவிப்படை புடைசூழத்
தினமொய்த்திய வொலிதுள்ளப் புரவெளி துன்னிச் சற்குரு பதசேவை
நனருற்ற வரையொர் சிவிகைப் புறமுற நகருய்த்தனன் வலம் வரலாகக்
கனமெய்க் கவரிக ளிருபான் மந்திரிகளுடன் முனுமொர் கைவீசி. (௱௬௰)

செறிகோ யிலினக முறவுய்த்தங் கொருசிங்காதன மீசையுற வைத்துக்
குறிசோட சவுபசாரத் தொடுபத பூசைத்தொழில் குறைவறமுற்றி
நெறிமாமறை யவரொடு போஜனமுண நிகழ்வித்துறு மிகைதானுண்டான்
அறிதே சிகர்கொள வணிகோசிக முடனடைகாய் சந்தலர் பிறதந்தான். (௱௬௧)

கூடப்புகு மொருதத்துத் தனையக மாகக் கொடுதனி முகநோக்கித்
தேடற் கருமடிகளின் வெந்நுற்றதடிப் பேதுள செயல் செப்பென்ன
நீடச் செயல் வெளிசெய்யே லென்றருள் குருவுக்கஞ்சி நிகழ்த்தானாய்
வாடப்புரவல னுளதோ தாயெனில் வாழேனுயிர் விடுவே னென்றான். (௱௬௨)

மன்னவ் வுயிர் விடுதற்கஞ்சின னுளதோதத்தெரி புரவலனந்தச்
சென்னல் விளைவு செய்வோனிற் சினமுடன வனைத்தூதரில் வரவேவித்
துன்னல் விடைரகுபதி கீர்த்தனகதை சொல்லக் கேட்டன னுறைபோதில்
முன்னல் விடைகொடு சென்றேரவனை முனிந்தாத்தனர் கொடுமுன் வந்தார்.

வரல் கண்டவனையொர் சிறைதங்கிட விடுமென்றான் விழிவழி மறவேந்தன்
குரல் கொண்டதி னெறிகுடியான வனிவனெனவே தெரிகுருபரசாமி
முரல் கொண்டவனை யழைக்கப் புரவலன் முகநோக்கினர் மொழிதர வேந்தன்
நரல் கெண்டுளவ வைவரல் செய்தன னவனைக் கட்டுறுதளை நசழ்வித்தே. (௱௬௪)

இறைபோர்த் துறவியலுஞ் சாலுவைதனை யீந்தங் கவனது கொல்லைக்குற்
றிறை தீர்த்தரு ளிதிவேந்தே யென்றன ரிறையு மப்படியே செய்தான்
குறைபோர்த் துறுகிற கொல்லைக் காரனை நோக்கிக் குருபரனினி நீயுன்
தறைபோற்றிக் கொடுசந்தோஷத் தொடுதழை போவென்றனர் சபைதன்னில்.

நிருபன் பால்விடை பெற்றின்று யிருய நேர்ந்தே னெனமன மகிழ்வாகிப்
பெருகுங் கடிமனை சென்றானவை நிறைபெரியோரொடு சகலரு நோக்கிக்
குருபுங்கவரதுகுண நன்றெனை மகிழ்கொண்டோ தினர்புகழ் தினமூன்று
கருதும் புரவலனக மேவினர் நிசிகண்டேதத் தொடுகொடுற்றார். (௱௬௬)

வேறு.

விடியல் காண்டலும் வேந்தருள் குருபரர் மேய
படியை நோக்கின னுடையா பரணங்கள் பார்த்தான்
செடிகொ ளீள்பொழில் சென்றனா னெனத்தெரிந் தெங்கும்
கடிதி னுடினன் கண்டன னொருபுடை காட்டில். (௱௬௭)

கண்டு தாழ்ந்தடி பூசித்து நின்ற காவலனை
மண்டு பேரரு ளொடுவேதனந் தனைநோக்கித்
தொண்டுசேர் திரியம்பகம் போய்வரத் துணிந்தேன்.
வண்டுவாழ் தொங்கலா யெனவவனுடன் வருவேன். (௱௬௮)

என்றுரைத்தன னரச நீயென்னுடன் கூடி
ஒன்றுறத்தகா தவிந்தர்தமிடுக்குள தூங்குத்
துன்றுறத் தகுங்கலக மாதலிற் றொடரரசு
நன்றுறப் புரிந்திருக்கென நவின்றனர் பின்னும். (௱௬௯)

உத்தமத்தலங் களிலுள புனிதருக்குதவ
வித்தம் வேண்டுநீ நல்கென வேந்தனொட்டகமா
மத்தகக் கரிவாசி மேன்மாடுக ணிரப்பி
மெத்த வாடை நல்லணி படை வேண்டுவ வெல்லாம். (௱௭௰)

தந்து தாழ்ந்தவர் தமைவிட்டுப் பிரிவுறத் தளர்ந்தான்
நொந்துவாடலை யான்சென்று வரும்வரை நுடங்கா
வந்து மாமகன்றனைத் தினம் பூசித்து வழுத்தி
முந்து சூரிய குலத்திராமனோ மனமுன்னி (௱௭௧)

தினமுமன்ன முண்டுறைக நீயென்றுறச் செய்து
மன னமாமறை யவனொடு வழிக்கொண்டு சென்றோர்
தனது கோயில் போய்ச் சார்ந்தனன் வேந்தனுந் தாழ்ந்து
வனச மாமலரயனைநேர் மாதவர் வழியில் (௱௭௨)

வேந்து நல்கிய பொருளின் வேதியர்க் குணவிளைத்துப்
போந்து செய்வன செய்துதாம் பிச்சையே புசித்து
வாய்ந்த சேர்திரி யம்பக மென்னு மூர்வந்து
தேர்ந்து தானமுந் தருமமுஞ் செய்தனர் செய்ய- (௱௭௩)

அங்கு வாழ்மறை யவரிவர்தம் வயினணுகி
இங்கு நீர்வ பனஞ் செய்து கொண்மி னென்றிசைப்பப்
பொங்கு மாதவர் செய்து கொள்ளா தரிபுகழே
தங்கு மில்லிடைச் செய்து கொண்டிருந்தனர் சார்நாள். (௱௭௪)

ஒருதினத்தினிற் றத்துவோடுறு விளையாடல்
கருதியங்கவன் குறிவைக்க மற்றதைக் கல்லால்
பொருதி ஞரதைக் கண்டவர் யாவரும் புகழ்ந்தார்
தருதிறக்குறி தப்புறா தடித்தன ரொன்று. (௱௭௫)

பின்னு மற்றொரு கற்கொடோர் பக்ஷிபோராமல்
உன்னிவீசின ரஃதெறி பட்டுடன் வீழத்
துன்னும் வேதியர் தம்மை நோக்கினரிது சோர
முன்னிவீழ்த்தினன் காண்மி னென்றுற முறுவலித்தார், (௱௭௬)

கண்டவேதிய ரிறையுநேர் ஜீவகாருணியம்
கொண்டிலாதெதிர் கொன்றன னிக்கொலை யோனை
அண்டி நாமகா புருடனென் றறைவ தெப்படியோ
மிண்டு கொண்டவ னிவனெனப் பலபடி வெறுத்தார் (௱௭௭)

தாசர் பக்ஷியைக் கைக்கொடு சதுமறை யவரோ
நேசமின்றியா னெறிந்திதைக் கொன்றன னீவிர்
மாசகன்றமெய்ஞ் ஞானத் தீர் புண்ணிய வழியீர்
[illegible]ாசமிக்குளீ ராதலா லிறந்த பக்ஷியின்மேல். (௱௭௮)

பரிவுசெய்துநும் புண்ணியத்திற் சிலபகுத்துத்
தருவிரேலிது பிழைக்கு நுங்கட் கறஞ்சாரும்
கருதுறு தெறியெனக்கும் வெம்பவங் களைவாகும்
புரிதி ரென்றனர் கேட்டந் தமறையவர் புகல்வார். (௱எ௯)

இறந்ததைப் பிழைக்கச் செயராமற்கு மியலா
தறந் தழைத்துளே மாயினு மெங்களாலாமோ
பறந்த புள்ளை வீணேகொன்ற பதகனே யென்னச்
சிறந்த தாசர் ஸ்ரீ ராமனுற் செயத்தகா துளதோ. (௱அ௰)

ராமநாம நன்மகிமையைக் காண்மென நவின்று
தாமங்கைக் கொண்ட பக்ஷியை விடவுயிர் தழைத்துப்
போம தாயதுகண்டனர் பூசுரர் வியந்து
நேம நீட்வதாரி மற்றிவரென நினைத்தார். (௱அ௧)

இவரை ராமதா சென்பதற்கைய மின்றென்று
அவர் தஞ்சேவடி பணிந்தன ரன்பொடு துதித்தார்
எவரு நேரிலா ரங்கொரு திங்கள் காறிருந்து
பவர்நெடுஞ் சினைப்பஞ் சவடித் தலம் படர்ந்தார். (௱அ௨)

ஆங்கிராமனைக் கண்டடி பணிந்தெழுந்தன்பு
தாங்கியே பதினுறுப சாரமுஞ் சாரத்
தேங்கு பூசனை செய்தறம்பற் பலசெய்தார்
ஓங்கு வேதியர்க் கோதன மிட்டனரு வந்தார். (௱அ௩)

அன்றி ராத்திரி ராமகீர்த்தனம் புரியளவில்
வென்றி ராமனுக் கின்புமிக் கின்னுரு மேவி
நின்றி யாவர்க்குந் தெரிவுறு தவரை நேரணைத்து
நன்றி நேரித வசனங் கணவின்றுடன் மறைந்தான். (௱அ௪)

அனகர் பின்பு செய்தவம் ஜபமாதிய யாவும்
ஜனகி நாயக னுமசங் கீர்த்தனந் தனிலும்
கனம் விராவியதல்ல நஞ்சுண்டவன் கங்கைப்
புனனிலாத்தலை பொருந்தியுந் தாபம் போக்கிலனுய். (௱அ௫)

தசர தன்றிருத் தனைய னுமஞ் சொலித்தாபம்
பிசக தாயுற விளங்குகின்றன னன்பு பெருகி
நிசமிதே யெனத்தெரிமி னென்றி யாவர்க்கு நிகழ்த்த
வசம தாயினர் யாவரும் ராம நாமத்தில். (௱அ௬)

நயன நீருக ராம நாமந்தனை நவின்று
ஜயஜயா வெனத்தழைத்துற ராமன் மெய்த்தாசர்
புயலை நேர்திரு மேனியாற் காரதி பொருத்தி
வியனுறும் பிரசாத மீந்தனர் விடிவேலை. (௱அ௭)

ஆழியான் றிருமகனுக் கட்டாங்க வந்தனைசெ
தூழியூழி நீவாழி யென்றுறு விடைபெற்றுப்
பாழிசேர ணிகத்தொடு டாங்களி படர
வாழியென்ற வூராரொடுத் தவர்வணங்கினரே. (௱அ௮)

கூடவந்தவர் படாநெடுங் குடிலுறத் தாசர்
நீடமர்ந்தவூர் புக்கிடு பிச்சைபை நேர்ந்து
தேடருந் திறலனு மனைப்பூசித்துத் திருந்தோர்
மாடமைந்தடை சுட்டிராமனுக்கு முன்வழங்கி. (௱அகூ)

வேதியர்க் கமுத ருத்தித் தாமும் பின்பு மிசைந்து
நீதியிற்றிரு நாம சங்கீர்த்தன நிசியில்
ஓதிமுத்தின முற்றடைந் தவர்க்குப தேசம்
நீதிறப் புரிந்தெய்து வார்தாய்தந்தை சேஞர். (௱கூ0)

கங்கைமா நதிக்கரைவழி ஜாம்பெனக் கழறார்க்
கங்கணோர் புடைய ணிகத்தோடி ரங்கினராகத்
தங்கு மந்நகர்த் தலைவரும் ஜனங்களுந் தெரிந்து
நங்கள் வேந்து சிவாஜி தேசிகர் நண்ணினரோல். (௱கூக)

நாமெதிர்ந்து கண்டினிது பூசித்தருணண்ணல்
தாமன்றே செயத்தகுவ தென்றெழுந்தனர் சார்ந்து
மாமன்றே சிகராடிக்குக் காணிக்கைகள் வைத்துத்
தூமனங்கொடு தொழுதனர் தூரத்தே நின்றூர். (௱கூ௨)

நோக்கி ராமதாசனை யிவர் நூதன் மருவுடையார்
போக்கில் சூரியாஜிபண்டிதர் புத்திர ரலரோ
தூக்கில் யானெனத் துணிவுறு போதொரு பார்ப்பான்
நீக்கி யாரையுங் கிட்டிவந்தரு குறநின்று. (௱கூ௩)

வேந்தன்றே சிகராயினு நீரொவண்மேவி
வாழ்ந்துளீ ரெங்குப் போகின்றீ ரெனவருள் வடிவர்
சார்ந்துளேன் பஞ்சவடி யெனுந் தலத்துளே னும்மை
நேர்ந்து காண வென்றனர் குறுமுறுவன் முன்னிலவ. (௱கூ௪)

சொல்ல வேதியன் சூரியாஜிபண்டிதர் தோன்றல்
அல்லவோ வருநீவிர் நாராயணசாமிச்
செல்வ ரென்றறிந்தே னெனவவர் சிரித்திருந்தார்
வல்லதாய் தந்தைவரப்புரிவே னென்றுன் மறையோன். (௱கூ௫)

வினவு தாச ரென்றந்தை தாயென் வயின்மேவல்
கனமதன்றி யானேசென்று காண்பதே கருமம்
எனவெழுந்தனர் கானடையாய்ச் செலவி வர்க்கு
முனர் விரைந்த வூர்த்தலைவன் போய்தந்தைக்கு மொழிந்தான். (௱கூ௬)

இளைய புத்திர ரெய்தின ரென்னனு மின்பம்
அளையு முள்ளத் தராய்த் தந்தை தாயுடனவசம்
திளைவ தாயின ரப்பொழு தெய்தினர் சேனை
வளையவிற் புகுந்தார் தமையனை முன்புவணங்க. (௱கூ௭)

தாசர் தம்மை யத்தமையனூர் மார்புறத் தழுவி
ஆசிகூறிட வன்னைதாள் வணங்கின ரன்னை
நேச நீடமார் புறவணைத் திருகண்ணி னீரால்
மாசின் மஞ்சன மாட்டினள் முகங்கண்டு மைந்தா (௱கூ௮)

எனைமறந்து நீயித்தனை நாளெவணிருந்தாய்
புனைவதாயினை புகரில் கோசாயி வேடத்தை
நினைவதென் கொலோ வெனமிக விரங்கினனிற்கத்
தனையர் தந்தையை வணங்கினர் தழுவினர் தந்தை. (௩௧)

ஆசிகூறின ரன்புறத் தந்தைதாயண்ணர்
மூசி நின்றுதம் வயினன்பு மொய்ப்பது தெரிந்து
மாசிலாதவர் மூவர்க்கு முள்ளமாமயலை
வீசினுர பங்கங்கள் பற்பல முனர்விளம்பி. (௨௰)

மூவருந் தெரிந்தீங்கி வனங்குல முழுதும்
தாவரும் புவிதன்னிலீ டேற்றிடச் சார்ந்தான்
மேவருஞ் செயலா னெனமகிழ்ந் துள்ளம் வியந்தார்
யாவரும் புகழத்தக் கோர்பிக்ஷைக் கெய்தினரோ. (௨௰௧)

ஆறுமைந்து மாமனை யிடை யேற்றனராகி
மாறுகொண்டிலர் தம்மனை வருதலுங் கண்டோர்
வீறுசேர் புவிவேந்தற்குக் குருவென வமைந்தும்
ஆறுபிச்சை யூண்மிசைவதே துணிந்தனர் துணிவோ. (௨௰௨)

கடினமாவ யிராக்கிய மெனவன் புகலந்து
முடிவிரேத்திர மொழிந்தனராக முன்றந்தை
மடிவின் மாமறை யவருண வோதனம் வழங்கி
நெடிது தக்கணையோடு தாம்பூலமு நிறைத்தார். (௨௰௩)

பிள்ளையான மற்றிருவரோடுண்டனர் பின்பு
கொள்ளையானந்த மேவினரிருப்புழிக் குறைவில்
புள்ளையூர் பவன்ருசர் சாத்தார் புகப்போதத்
தள்ளை தந்தையோ டண்ணருந் தாசனை நோக்கி. (௨௰௪)

யாமுநின்வயினன் புடையரசனை நோக்கப்
போமுன் பின்வருவோமென நன்றென்று புனிதர்
தாமும் பன்மிசை யண்ணனைத் தந்தையை யேற்றி
பூமுன் மங்கையைப் பொருவுதாய் சிவிகை மேற்பொருந்த. (௨௰௫)

கொண்டு மூவர்க்குஞ் சேவை செய்தனி கத்திற் கூடி
மண்டு நீர்வளங் கெழுமுசா தார்புறம் வாய்ந்தார்
அண்டு தூதரா லறிந்து வேந்தனிகத்தோ டெதிர்ந்து
கண்டு கொண்டடி பணிந்தனன் பூசித்தான் களித்து. (௨௰௬)

தந்தை தாயண்ணர் தம்மையுந் தாழ்ந்தன னின்று
முந்து நற்றின மாதலா னும்முக நோக்க
வந்ததென்னுடை நற்றவ மென்றனன் வழுத்தி
மைந்தர் தம்மையோர் சிவிகைமே லேற்றினன் வந்தான். (௨௰௭)

சாமரங்கொடு வீசின ளகர்வலந் தந்து
காமரங்கனிந் திசைதரப் பல்லியங் கறங்கப்
பூமடந்தைநேர் மங்கையர் பொலிவுடன் வாழ்த்த
மாமடங்கலில் கோயிலுட் சோணர்ந்தனன் மகிழ்ந்து. (௨௰௮)

அயினி நீர்கொடு சுழற்றிப்பின் போர்புறத்தமைத்த
வயினகன்றசிங் காதனமேற்றினன் வைத்து
மையின் மணிக்கலம் பூட்டிநல் வஸ்திரம் வனைந்து
கையினியற்றின னெண்ணிருமுகமனுங் கனிவாய். (௨௱௯)

மறையவர்க்கு நால்வருக்கு மின்போஜனம் வழங்கிக்
குறைவி லுத்தமருண்ட வூண்மிச்சி லுட்கொண்டு
முறையி னண்ணலை யிராக்கதை மொழிந்திடச் செய்தான்
நிறையும் யாவருங் கேட்டுள மகிழ்ந்தனர் நிரம்ப. (௨௱௰)

பின்னர் சாமிக் காரதி செய்தபின் பிரசாதம்
நன்னர் யாவர்க்குந் தரவவர் வாய்ந்துபோ யினபின்
முன்னரோடுதாய் தந்தைகண் முகிழ்த்தினி துறங்கச்
சொன்ன ராமதாசருக் குபசாரந் தான்றெருகுத்து. (௨௧௧)

துயிலச்செய்தன னிவ்வகை யொருமதிதுன்னப்
பயிலுமற்புத தாசர்பார்த்திபன் றனைப்பார்த்தன்
வயினிற் சார்ந்தவென் றந்தையோ டன்னைமாதாவை
எயில் சுற்றோங்கிய ஜாம்புறச் செய்தியின் றென்றார். (௨௧௨)

ஏந்தல் கேட்டுடன் வஸ்திர பூஷண மேமம்
வாய்ந்த நால்வகைச் சேனைமற் றுதியவழங்கி
நேர்ந்த ஜாம்பெனு மூரைநற் கொடையதாய் நிரப்பிப்
போந்தமூவர்க்கு மினிதுநன் முகமனும் புகன்று. (௨௧௩)

சூரியாஜி பண்டிதரது துணைவியார் தம்மை
நேரி னோக்கி யாவரு நிகர்க் கின்றிலீர் நீரோ
பாரினோர் பராந்துருவனைப் பிரகலாதனைமா
சீரின் மேம்பட்டலாகிய திறலனுமானை. (௨௧௪)

பெறுசு நீ திகியாதிசீ ரஞ்சனை யெனப்பேர்
மறுவிலாரோன ராமதாசனை வயின்வாய்த்திர்
நிறுவி யெவ்வுலகையு முத்தரித் தருணிமித்தம்
தெறுவி ரெவ்வினையையு மெனத்துதிபல செப்பி. (௨௧௫)

தீர்க்க வந்தனஞ்செய்தவ ராசிகள் செப்ப
ஊர்க்கண் மேவுற வழிவிட்டு வந்தன னுரவோர்
யார்க்குந் தேர்வுறு தேகினர் தத்த வோடியல் கான்
சேர்க்குமாடையா பரணங்க ளவ்வயிற் றீர்ந்து. (௨௧௬)

அரசு வேதியர்க் கருத்துபோ தண்டவந்தனன்மா
விரசுமாவலி யென்னுமூர் மேவும் வெள்ளறிவன்
பரசுமூணனி யுண்பவ னக்கரம் பயிலான்
உரசு காதன்மிக் குள்ளவன் மணம்பெறு வொருவன். (௨௧௭)

இம்மண் ணுள்பவன் றனக்குத்தே சிகனென வியைந்தோர்
தம்மிடத்துப தேசம்பெற் றுலது தன்னைச்
செம்மையாகிய போனகஞ் சித்திக்கு மாசன்
மெய்ம்மை சேர்நண்பு மேவிப்பொன் னீட்டலு மேவும். (௨௧௮

என்று நிச்சயித் திராமதா சிருப்பிடந்தேடித்
துன்று வோன்புலி கரடிகள் சூழ்வுற நாப்பண்
ஒன்று வோர்தமைக் கண்டன னருகுற வொல்கி
நின்று தூரத்திற் ஜேத்திரம் பற்பல நிகழ்த்த. (௨௧௯)

தெரிந்து தேசிக ரந்சண பயப்படேல் சேர்தி
புரிந்த வென்னுழை யெனவவன் போய்ப்பதம் போற்றப்
பரிந்துதேசிகர் வந்ததென் பகர்தியென்னலுஞ்சீர்
விரிந்த நும்மருள் பெறவிங்கு மேவினே னென்றான். (௨௨௰)

எனலு மென்னரு ளாலுனக் கென்வரு மென்றார்
அனகர் நல்லஞ் ஞானமுடையா பரணங்களாதி
தனமு நும்மரு ளருமிவை யின்றியான் றளர்ந்தேன்
தினமு மென்றனன் றேசிகர் சிரித்துபதேசம். (௨௨௧)

பெறற்குத் தக்கவ னல்ல னென்றுளங் கொண்டு பெயரத்
துறக்கமற்றவ னீருப தேசஞ்சொல் லீரேல்
இறப்ப னீங்கெனத் தேசிக ரிவன்கொடு மூர்க்கன்
மறத்தி னுவியை நீக்கினு நீக்குவான் வல்லே. (௨௨௨)

என்று நிச்சயித் துடனவற் கிதவுப தேசம்
ஒன்றநல்கி மற்றவன் றனைநோக்கி யொன்றுரைப்பார்
இன்றுதொட்டவா விகந்தின்ப துன்பங்க ளெதிர்ந்தால்
நன்றுதீதென நாடுறா துயிர்கட்கு நலஞ்செய். (௨௨௩)

சாது சஜ்ஜனர் தமக்கன்பு செய்து நாடோறும்
போது போதுறு காலத்திற் புனிதநீராடித்
தீதுறாநிய மத்துடன் பதிதொறிற் சேர்ந்து
கோது தீர்பிச்சை கொண்டதி லதிதிக்குங் கொடுத்து. (௨௨௪)

அட்டிராமனைப் பூசித்து நிவேதன மமைத்து
மட்டிலிந்தநன் மந்திரந்தனை மனனஞ் செய்
துட்ட தும்பிடா துண்டுறி லிவ்வுபதேசம்
இட்டமாகிய பலந்தருந் தவிரிலீ யாதால். (௨௨௫)

என நன்றென்றவ னிருப்புழித் தாம்பிச்சை யேற்றுத்
தினமுஞ் செய்முறை செய்துண்டு சேர்ந்த தத்துவுக்கும்
அனகரீந்தன ரன்புட னருந்தின னிருக்க
உனலருந்திறல் வேந்தன் வந்துற்றன னாங்கு. (௨௨௬)

தேசி கோத்தமர் தமசடி பூசித்துத் திருந்து
நேசமோடு கொண்டு வந்த நல்லுண வெலா நிறைக்க
மாசிலாத வருண்டு பின் மிகுந்ததை வனத்தில்
மூசுவானரங்களுக் களித்துற முதல் வனுக்கு. (௨௨௭)

தாமுனட்ட வப்பதத்தின் மிச்சிலைத் தரத்தாங்கிக்
கோமுனுண்டு தன்னகர் சென்றான் குருவருள் கொண்டு
போமுன் கண்டங்குத்தங்கிய வேதியன் பொருமி
நாமுன் கண்டதின்றிவ் வதிசய மென நாடி. (௨௨௮)

உப்பிலப் பத்தின் பிச்சிலா மெச்சிலை யுண்டான்
ஒப்பில் வேந்தனே யென்னில் யாம் பெறுவது முதுவே
தப்பிலாவி வரருளுபதேசந்தான் றருமோ
வைப்பினற் பயனென்றகம் வருந்தினனாகி. (௨௨௯)

மூன்று நாளுணவுறக்க மின்றாயிவண் முயன்றால்
ஊன்று வெம்பசி யாலுயிர்போ மெனவுன்னி
ஞான்று தோறுமை யம்புக்கு நலிவுற நம்மால்
ஏன்று முற்று மோவிது தகாதென்று தேசிகர் பால். (௨௩௰)

நின்று நானயலூர் செல நினைக்கின்றே னீவிர்
ஒன்று மிவ்விடத்துற மனமுறுகிலே னென்ன
நன்று நீயெனதுரைப்படி நடத்தி போ வென்றார்
அன்று தேசிகரவன் வணங்கினன் சென்றான கன்று. (௨௩௧)

வேறு

எங்கு நல்லுணவு வாய்க்கு மென விசாரித்துக் கொண்டு
மங்குவான் போகக்கண்ட மற்றவனவனை நோக்கித்
தங்கு மிவ்வூருள்ளார்க்குத் தலைவன்றன் வீட்டில் ஞானம்
பொங்கு மோர் புருடனுக்குப் போனகம் வழங்கு கின்றான். (௨௩௨)

அவன்மனை தனினீ சென்றாலறு சுவைச்சோறு வாய்க்கும்
தவமறை யவனே சேறி யெனலுமம்மனைக் குட்சார்ந்து
பவருற நிறைவதான பந்தியிலிருந்துண்டின்புற்
றிவர் பெரியவரோ வாய்த்த வின்றுதான் சுதின மென்று. (௨௩௩)

இந்த மாபுருடர் தம்பாலினிதுபதேசம் பெற்றால்
எந்த நாளினு நல்லுண்டி யிசையு மென்றெண்ணி யாங்கு
வந்த மாபுருடர் தம்மை வணங்கி நன்குபதேசத்தைத்
தந்தருள் செய்தி ரென்றான வருந்தான் யாரென்றார். (௨௩௪)

இல்லற மெனக்கின்றிந்த மாவுலியிருப்பதி யானோ
நல்ல முதகப்படா மனர பதிதனதாசானல்
சொல்லனுக் கிரகம்பெற்றாற் சுவையுணாக் கிடைக்குந் துய்த்திங்
கல்லலற் றிருக்கலாமென் றவரனுக் கிரகம் பெற்றேன். (௨௩௫)

வனத்தவ ரிருந்துபிச்சை வாங்கிவந் துப்பிலப்பம்
கனத்தவெம் பசிதீர்தற்குக் கால்வயி றுண்டுகாலம்
சுனைக்கழிக் கின்றாரன்னோர் தம்மொடு கூடிவாழ
எனக்கிசை யாமல்யானும் மிடஞ்சர ணடைந்தேனென்றான். (௨௩௬)

என்பதை வினவியந்த யதியிந்த உலகத்துள்ள
மன்பதை தமைமீட்டேற்ற மாருதி யம்சராகி
இன்புசெய் திறைவனுக்கு மெவர்க்குந்தே சிகரானோர்பால்
அன்பனுக் கிரகம்பெற்று மிவன்வினை யழித்ததந்தோ (௨௩௭)

எனநினைந் தவனைநோக்கி யொருவர்பா விதோபதேசம்
தனையடைந் தனைவேறேயோர் தவருப தேசங்கொள்ள
நினைவுற லடாததாகு நினக்கவ ருபதேசித்த
அனையது தனையேபோற்ற லழகிதென் றறைந்தா ரன்னோன். (௨௩௮)

அவ்வுப தேசந்தன்றற் பட்டினி கிடக்கலாற்றேன்
செவ்வியீர் நீரோநன்கு செயுமுப தேசமென்முன்
வெவ்வினை யவனன்றனைத் தம்வயின் விலக்கவேண்டி
வவ்விய வுபதேசத்தை வழங்கினோர் வயின்வழங்கி (உ௬௯)

வருகவென் றுரைத்தாரந்த மாதவர் மறையோன்கேட்டுப்
பொருவறு ராமதாச ருறைவனம் புகுந்துகண்டு
பெருகநல் லுணவுநல்கும் பெரியதே சிகரைப் பெற்றேன்
அருளுநும் முபதேசத்தைக் கொடுவிடை யருளுகென்முன். (உ௭௦)

கேட்டவர் நன்றுயிற்றிங் குன்னைப்போற் கிளருஞ்சீடர்
நாட்டகப் படுவரோவுன் வாயிடை நன்னீர்பெய்து
கூட்டிய புனலைக்கொண்டு கொப்புளித் துமிழ்கவென்றூர்
ஊட்டின னீரைவாயிற் கொப்புளித் துடனுமிழ்ந்தான். (உ௭௧)

உமிழ்தலும் பாறைமீதி லவருபதேசஞ்செய்த
அமிழ்தினுஞ் சுவையதான வக்கர மேழுமாறும்
கமழ்தர லாகிக்கன்மேற் காந்தின வெவருங்காண
இமிழ்திரை யுலகத்தின்று மினியிட்டப் படிசெல்கென்றூர். (உ௭௨)

தாசரோ வுதலுங்கேட்டுச் சார்ந்தனன் சாப்பாடிட்ட
பூசுரர் தம்பானின்று புகுந்தவ புகன்றுன்கேட்டு
மாசில ரந்தோராம தாசர்மந் திரத்தைவாயின்
வீசினை யதனையன்றி வேறிலை யெனதகத்தும். (உ௭௩)

குருவுப தேசந்தன்னைக் கொப்புளித் துமிழ்ந்தநீசா
அருகுறே லகறியென்ன வகத்துற முனிந்தார் பார்ப்பான்
பெருகவும் பயந்துநில்லா தகன்றனன் பெயர்ந்துபோனன்
கருதரு ராமதாசர் காட்டிற்சஞ் சரிக்குநாளில் (உ௭௪)

அங்குப்பண் டரிக்குப்போகும் யாத்திரைக் காரரண்மித்
தங்குறப் படாநல்வீடு தழைப்பச்செய் திறங்கியன்று
கங்குலிற் றுகாராம்சாமி கழறபங் கங்களாலே
பொங்குபண் டரியென்றேதும் புரத்தது மகிமையெல்லாம். (உ௭௫)

தாளமிர் தங்கம்வீணை தழைப்பக்காற் சதங்கையார்ப்ப
நீளரவத் தோடாடிப் பாடினர் நிரம்பக்கண்டு
கேளமை நல்லீர்யாண்டுச் செல்கின்றீ ரொன்றுகேட்ப
மூளருந் தவத்திராம தாசர்தம் முகத்தைநோக்கி. (உ௭௬)

யாங்கள்பண் டரிக்குச்செல்லும் யாத்திரைக் காரரொன்றூர்
ஆங்கவ ரிராமயோகத் தமைந்தன ரிருக்கவந்தோர்
ஈங்கிவர் பெரியயோகி யெனத்தெளிந் தவர்பால்வந்து
பூங்கழல் வணங்கியைய போதுக வெம்மோடென்றூர். (உ௭௭)

பண்டரி புரத்திலெந்தப் பரமனுள் ளான்மற் றன்னோன்
தொண்டரி லெவருக்கேது சூழ்ந்தன னென்றூர்தாசர்
புண்டலீ கருக்குக்கண்ணன் போந்துநின் றவரோயாதி
கண்டபற் பலருக்கெல்லாங் கருணைகூர்ந் திலங்குகின்றுன். (உ௭௮)

ஆதலா னீவிரெம்மோ டடைந்தவன் றனைச்சேவிக்கப்
போதுக வென்றுவேண்டப் புனிதராம் ராமதாசர்
சீதைதன் கேள்வனையென் குலதெய்வ மவனைத்தீர்ந்தோர்
நாதனி னனுகுறுதென் மனமிதற் கென்னன் செய்வேன். (உ௪௯)

என்றனர் வினவியாரு மிவர்கருத் திவ்வாறென்
றன்றவர் தமைவணங்கி விடைபெற்று ரகன்றார்பின்னும்
ஒன்றரி தாசர்நோக்கி யுடன்வரக் கூவத்தாசர்
நன்றவ னிராமனுண்டே னனுகுவ னும்மோடென்றார். (உ௫௦)

ஜனகிதன் கேள்வனையவ் விட்டலன் றனென் றுற்றோர்
சொனவுரைக் கிசைவுறாம விருப்பது கண்டுசூழ்ந்தோர்
மனநல முடையகற்பின் மாதர்போன் றவரொன் றெண்ணி
நனர்விடை பெற்றுச்சென்றார் நளினைநா யகனதோர்ந்து (உ௫௧)

தாமொரு மறையோனாகித் தாசர்வாழ் கானஞ்சார்ந்தான்
நானநன் கியற்றித்தாச ரடைசுட்டு நவிலிராமன்
போனகஞ் செயச்செய்துண்ணும் போதுவே தியனைக்கண்டு
தேனலர் போதுபோலுஞ் சேவடி களைச்சேவித்து (உ௫௨)

இப்பிர சாதந்தன்னை யினிதுநீ ருண்பீராகில்
ஒப்பிலாச் சனகிகேள்வர்க் குவப்பதா மென்றுவேண்ட
அப்பிரா மணன்கேட்டுக்கா னடைந்ததிங் கிதற்கேயென்று
மைப்பிர ளயத்தின்மூழ்கி நனைந்தவஸ் திரத்தினோடே (உ௫௩)

பன்னிரு நாமஞ்சாத்திப் பலாசிலை களைத்தைத்துக்கொண்
டன்னவர் தம்பால்வைக வடைதந்து மிசையுமென்றார்
சொன்னவர் முன்பேகண்ணன் சுரரமு தினுநன்றாமீ
தென்னவுண் டிராமதாசர் தம்மைப்பார்த் தியம்புகின்றான். (உ௫௪)

பட்டினி பன்னாளுற்றேன் பசிதெறப் படைத்தி ரப்பம்.
முட்டிலை யெனத்தாசர்க்கு முகமனன் குரைத்திருக்கக்.
கிட்டிய நீர்யாண்டுச்செல் கின்றனிரிருப்ப தியாண்டு
மட்டினும் பெயரேதென்ன மறையவன் வழுத்துகின்றான். (உ௫௫)

பண்டரி புரத்திற்பன்னாட் பயிலுவேன் குடும்பத்தோடும்
எண்டரு மெனக்குநாமம் விட்டல படவே யென்பார்
தொண்டரா யாத்திரைக்குத் தொகுமவர்க் கெதிரில்வந்து
கண்டவர் தமைக்கூய்ச் செல்வான் கடுகுவன் வருடந் தோறும். (உ௫௬)

ஆடிமா தத்திலேகா தசிசமீ பித்ததாலே
நாடினன் வருவோர்கூவ நணுகின னணுகநீரும்
கூடியென் னுடனேவாரு மென்னக்கா குத்ததாசர்
தேடிலன் ராமன்றன்னை யன்றிவே றொருதெய்வத்தை (உ௫௭)

நானினிது வந்துகாண ராமனங் கிருந்துசேவை
தானினி துதவுவானேற் சார்குவெ னும்மோடென்றார்
தேனினி தொழுகுங் குல்லைத் தெரியலான் றன்பாலுள்ளான்
மானினி தார்வோலீன்ற மகனுமங் கிராமன் றன்னை (உ௫௮)

காட்டுவான் வருதிரென்று கழறினன் மறையோனச்சொற்
கேட்டுள மகிழ்ந்தி ராமதாசர் தத்துடனேகிட்ட
வேட்டுடன் வரமார்க்கத்தில் விண்மிகப்பெய்துசேறாய்த்
தாட்டுணை களின்முட்டைக் கத்தாசர்தாந் தளர்வுறாமல். (உருகூ)

மறையவன் முட்களெல்லாந் தன்கையால் வாங்கிப்போக்கிக்
கறவையான் முன்னே செல்லக் கன்றுபின் றொடருமாபோல்
நிறைதவர் தொடர்ந்துசார நெடிதுபோய்ப் பண்டரிக்கு
முறைமுறை வருவோரோடு கூட்டியுட் போதமூட்டி. (உகூ0)

இன்னுமிங் கெய்துவோரை யழைத்தியான் வருவேனென்று
பன்னியம் மறையோனேகப் பாண்டுரங்கன்றன் கோயில்.
மின்னிய சிகரங்கண்டு மிகவுமா னந்தங்கொண்டு
பொன்னியன் மார்பினுனைப் புகழ்ந்தனர் போகும்போது. (உகூக)

பல்லியமுழங்க நேர்ந்து பரவினராடிப்பாடி
எல்லையிலன்பர் கூட்டமான நீத்தவசமெய்திப்
புல்லுவர் தொழுவராகி யொருவர்க்கங் கொருவர்போற்றும்
நல்லியற் செய்கை யெல்லா நயந்தனர் வியந்துசொல்வார். (உகூஉ)

இன்னவா றவசமாக விலங்குமிக் கோயில்போல
முன்னர்யா னெங்குங் கண்டதின் றெனமுகங் குளிர்ந்து
பன்னகவைரிகம் பத்திடைவந் துபணிந்துபோற்றி
நன்னரங்கமரு மாஞ்சனே யரை நணுகிக்கண்டார். (உகூங)

கண்டடி தொழுது போற்றிக் காகுத்தற்கன் புசான்றீர்
எண்டகுமு மதிராமனெங்குள னியம்பு கென்றார்
பண்டைய துவாபராந்தத் திடை பசுந்துள வக்கண்ணன்
கொண்டல் போனிறத் திராமன்றா னெனக்குறிக்கச் செய்தான். (உகூச)

அன்று தொட்டின்று காறும பேதமாய் வணங்கு கிற்பேன்
நன்று செய்கண்ணனே யிவ்விட்டலனுமங் கொண்டான்
தொன்றுறு ராமனே கண்ணன் பதந்தொழுதி யென்றார்
முன்றுறு மருத்தின் மைந்தர் முயங்கினரழைத்துச் சென்றார். (உகூரு)

மாருதியுடனே சென்று வளரொளி விமானத்துள்ளே
நேருற விளங்குகின்ற விட்டல நிமலன்றன்னைச்
சீருறப்பணிந்து நின்று தினகரகுலத்திராமா
ஏருறு ஜனகிகேள் வாவெனப்பல புகழ்ந்து போற்றி. (உகூகூ)

நின்ன திராமரூபம் யான்கண்டு நினைந்து போற்ற
நன்னரிங்கருள் செய்கென்ன நயந்தருள் பாண்டுரங்கன்
தன்னருட்டம்பியோடு ஜனகியுந்தானுமாக
முன்னர் நின்றிலங்கித்தாசர் தமையுற முயங்கல் செய்தான். (உகூஎ)

முன்பஞ்சவடியிற்கண்ட முறைகண்டு தொழுது போற்ற
அன்பரஞ்சலிக்குக் கண்ணனவ்வகையான தோர்ந்து
பின்பங்குச்சார்ந்த தொண்டர் தாசரைப் பெரிதுபேணி
இன்பஞ் செய்திராமன்றன்னைக் கண்ணனுயியற்று கென்றார். (உகூஅ)

குறைவிலாவன்ப ரெல்லாங் கூடினர் வேண்டுகின்ற
முறை நிலாவுதியிராமா வெனத்துதி மொழிந்து போற்ற
நிறைகுலாந்தாசரேத்து நிலைப்படி நிலாவி நின்றான்
மறை யெலாந்துணிந்து போற்ற வயங்குறு பாண்டுரங்கன். (உசுகூ)

கண்டுறு தொண்டர் யாருங்காலிடைப் பணிந்திராம
தொண்டரைப் பலவாறாகத் துதித்தவர் செங்கை தங்கைக்
கொண்டனரரிதன்னுமை கோஷஞ் செய்தவரோடந்தப்
பண்டரி நகரைச்சூழ்ந்து வலம் வரும்பரிசு பார்த்தோர். (உஎ0)

பரவசராகிக் கூத்துப்பயில்வதும் பரமனும்ம்
திரமுறப் புகல்வதுங் கண்டுளந்தனிற் செறிந்தானந்தம்
விரவுறு ராமதாசர் விழிகணீர்ததும் பவிம்மிக்
கரதலந்தாளங் கொட்டப்பாடினர் களித்து வந்தார். (உஎக)

கருடகம் பத்திற் சார்ந்து கண்ணற்காரதியுஞ் செய்து
தெருடரு தீர்த்தமான சந்திரபாகை சேர்ந்து.
புருடரிற் சிறந்தநாம தேவர்தாம் புளினத்தாடு.
மருள் கெடப்பாடு நாம கீர்த்தனவகைகள் கேட்டு. (உஎஉ)

இரவொரு மூன்று ஜாமத்தளவு மின்புற்றிருந்து
பரம னுள்ளுவப்பதாக வாரதி பரிவிற் செய்து
வரபிரசாத நல்க வாங்கினர் மறுதினத்தில்
தரமிகு தாசரெல்லாந் தாசரைப் பணிந்து போற்றி. (உஎங)

இன்றிராக் கதைநீர் செய்ய வேண்டுமென்றி ரந்துகூற
ஒன்றிய ராமதாச ருறுசிறு வயதிலேயான்
துன்றிய வனத்திற் சேர்ந்து ராமநாமங்கள் சொல்லி
நன்றினி திருந்தேன்றன்னை நாமகீர்த்தனஞ் செய்கென்றால். (உஎச)

தாளம் யாழிசை யிராகஞ் சார்வுறப் பாடத்தக்க
ஆளலே னென்றா ரன்பர் யாவருமவரை நோக்கி
நீளராமனுக் கன்புற்றீர் நீர்சொன்னபடியே கேட்டான்
நாளநன்க மலம்போலு நயனங்கொள் பாண்டுரங்கன். (உஎரு)

இப்படி மகிமை யெய்ந்த நீரினி தெவ்வாறாகச்
செப்பினு மெமக்கானந்தஞ் செறிவதாம் பகர்கென்றன்னார்
ஒப்புறப் பணிந்துபோற்ற வுவந்துடன் ராமதாசர்
மைப்புயல் போலுமேனி ராமனை மனத்திற் கொண்டு. (உஎசு)

விட்ட லன்றன்னை நோக்கி விதவிதமாகப் போற்றி
மட்டறு கதை செய்தியார்க்கு மாதவ னுமைந்தானே
இட்ட தாரகமா மென்னவியம்பி நிச்சயிக்கக் கேட்டோர்
உட்டழை வாகிக்கண்ணற் காரதி வுவப்பச் செய்தார். (உஎஎ)

வேறு.

மறுதினந் தண்மதி நிறைவாந்திதி
பெறுத லாலன்று பாண்டுரங்கப்பிரான்
செறிமணிச் சுடர்த்தேரி லெழச்செய்து
நெறிதரும் பல்லியங்க ளெருங்கவே. (உஎஅ)

பரவுகின்ற கோபால காலா வெனும்
தரம தாமுறச்சவஞ் செயச் சார்ந்தனர்
விரவுகின்ற கோபால புரம் விராய்
அரவ நீடுறப் பாடின ராடினர். (௨எ௬)

கண்ண னூடுறு கந்துகந்தும் பிகோல்
நண்ணு கோணங்கி கொம்பியெனு நவில்
வண்ண நல்வினை யாட்டின் வகைசெய்து
வெண்ணெய் நெற்பொரியோடு நிவேதித்தார். (௨அ0)

நிம்பராஜ ரருள் பிரசாதநீ
டம்பரத்த ரடைந்து மனிதராய்
இம்பர் சிந்தின கண்டெடுத்துட் கொள
நம்பியாவரு நன்கினி துண்டனர். (௨அ௧)

உண்டபின்பு கண்ணன் னுடனேங்கு சீர்
மண்டு கீர்த்தனம் பாடிவழி யுறிஇக்
கண்ட நெய்தயிர்பாற் கலங்கோல் பொத்துக்
கொண்டருந்தி நின்றாடினர் கூடினர். (௨அ௨)

இன்னும் பல்வினை யாடலொ டெய்தினர்
மன்னும் பண்டரி வந்தருட் கண்ணனை
மின்னுங் கோயில் விளங்க விருத்தினர்
துன்னுந் தம்வயின் யாவருந் துன்னினர். (௨அ௩)

கோயி லர்ச்சகர் கொண்டக தவிரா
வாயின் மூடிமனை புகலானபின்
தாயிலன் புறுதாச ரதிக்கன்பு
மேயினர் நல்விடை பெறவேண்டினர். (௨அ௪)

கண்ணன் கோயிற் கதவரு குற்றனர்
திண்ண மேய்கதவந் திறப்புற்றதாய்
நண்ணவுட் புகுந் தாயிரநா மன்றன்
வண்ணமா மலர்ப்பாதம் வணங்கினர். (௨அ௫)

தீர்த்தன்றாளிற் சிரம்வைத்துப் பல்படி
ஏத்திநாத வெனைத் தினங்காண்குறான்
ஆய்த்துப் பின்றிய யருஞ்சிவாஜியாம்
பார்த்தி பன்னவன் பக்கல் புகும்படி (௨அ௬)

எனக்கு நல்விடை யீகென வேண்டினர்
புனக் கொழுந்துள வோனருள் பொங்கிநீ
வனக்க ணீங்கியென்பால் வரலென் றென்றான்
உனக்கென் பாலரு ளூற்றவன்று மென்றார். (௨அஎ)

பின்னையும் பெருமானை வணங்கினர்
என்னைநீ பிரியாமலி ருந்தருள்
துன்ன வேண்டு மென்றார் சொலத்தோ மிலான்
நின்னை யோர்கண நீங்கிலன் யானென்றான். (௨அஅ)

கோக்களைக் கொலைசெய்து தொழுங்குல
மாக்களைக் கடிந்தின் னலில்வாட்டியே
பூக்களைச் சொரிந்தே புனிதந்தரு
காக்களைச் செறிகண்ணனதி வந்தான். (உகக)

வந்துதீரத்திறங்கினன் வைகுபோ
தந்தவேந்தனை யீகத்தலை மகன்
உந்துமாவுலிக் கானிடை யோர்குறி
தந்து மற்றதிற் சாயகம் வீசினன். (ருஅ)

வீசினன் பயில்கின்றதை மெய்யுணர்
தேசிகோத்தமர் கண்டவன் முன்சென்று
நீசிலிமுக நேருற வெய்தலிங்
கேசிறந்த தென்றெண்ணலை யேவினை. (ருஅக)

விடுத்துப் பாய்ந்துபின் பற்றன் மிகப்பெரி
தடுத்தவீர வென்றுரைது கேட்டவன்
தொடுத்தவம் பைத்தொடர்ந்து பின்பற்றுறக்
கடுத்தல் யார்க்கு மொண்ணுது நீர்காணவே. (ருஅஉ)

எய்கின்றேனம் பினைப்பற்று மென்றனன்
செய்கென்றுரு டனெய்த சிலீமுகம்
கைகொண்டார் பின்றொடர்ந்த கடுப்பினின்
மெய்கண்டான் வியந்தானடி வீழ்ந்தனன். (ருஅரு)

பூவிலே யவதார புருடரோ.
ஆவிர் நீரிந்து விற்பகீ ராமென்றான்
தாவிலன் பரவன் கைத்தனுக்கொடு
வீவிலோர்கணை நேர்விட பிக்கணே. (ருஅச)

ஏவிமுற்றுந்து வார மியற்றினர்
மேவிநின்றவன் கண்டு வியப்பெய்தி
தாவினம் முடைத்தானையும் வேந்தனும்
தேவினேரிவரோரம் பிற்றீயுமே. (ருஅரு)

எனநடுங்கினனேத்தினன் பன்முறை
தனது தானையுட் சார்ந்து தராபதிக்
கனகர் செய்கையறிவித்து வேந்தனே
டனைவரும் பதிக்கெய்தினனுத்தமர். (ருஅசு)

அங்கு நீங்கினர் சாம்பளகெடனப்
பொங்கு மூரிற் புகுந்தன்றி ராத்திரி
தங்கிராம கதைசெயச் சார்ந்துகேட்
டெங்கு மில்லதொ ரற்புதமீதென. (ருஅஎ)

அவசராயினர் யாவரு நேரிலாத்
தவரிடத்துப தேசந்தனைப்பெற
இவறினர்சிலர் சேவைக்கிசைந்துடன்
பவரினர்சிலர் பற்றலுற் றார்க்கெலாம். (ருஅஅ)

ஏண்ணமுற் றவினிதி னியற்றினர்
நண்ணினர்சஹ பூரிலந் நாட்கதை
பண்ணினரங்குப் பார்த்தவர் யாவரும்
உண்ணிலாவின னானந்த மூறவே. (௯௦௯)

தேசபாண்டி சிறுவியக் காபாயி
தாசர் தாளிற் பணிந்தெனக்குத்தக
நேசநல்லுப தேசநிரப்புகென்
றாசகன்றுவி ணவவறிந்தவர். (௯௱௰)

அடைவிலேயுப தேசமருளித்தம்
முடையசாயித்தி யங்களெலாமுவள்
இடைவிரா வநன் கிந்து பாராயணம்
தடையி லாதென்றுஞ் செய்கெனச்சாற்றினர். (௯௧௧)

அன்னகன்னித னன்பினுக் காயவண்
பன்னினர்சில நாள்மற்றவளுடன்
துன்னினு ரங்குநீங்கிச் சுராபுர
மென்னுமூரவர் சீடர்கள் யாவரும். (௯௧௨)

தேடிவந்து தெளிந்து கலந்தனர்
கூடவூரிற் குலக ருணீகன்றன்
ஈடின் மக்கடத் தோபாவென்றும் புகழ்ப்
பாடிலம்பாஜி பண்டிதனென்றுமே. (௯௧௩)

இருவர் தாமுண்டவ ரிலிளையவன்
பெருகுசித்தப் பிரமைகொண் டானது
கருக நீள்பரி காரங்கடாய்தந்தை
தருதல் செய்துந் தீராதவன் றனரோ. (௯௧௪)

மணமு மின்றுற மற்றவன் றய்தந்தை
அணவும் ராமன்ற னன்பர் பெருமைகேட்
டுணர்வின் மிக்கவர் பாதத் துறுத்தினல்
புணருந் தீதற்றுப் போமென வெண்ணியே. (௯௧௫)

ராமதாசர் நலங்கிளர் சேவடிப்
பூமலர்ந்திடச் சென்னி பொருத்தியே
யாமளித்த மக்கட்கு ளிளையவ
ளுமனத்துப் பிரமைப ஞளுற்றான். (௯௧௬)

எதுசெய்துமி கந்திலை தன்னதத்
தீது தீர்த்தருள் செய்யுமென் றேத்தினர்
ஆது கேட்டபங் கங்க ளொராறிலக்
கோது தீர்த்துக் கொடுத்தனர் பேரருள். (௯௧௭)

அவ்வம்பாஜி யறிவுமிக் காங்கவர்
எவ்வந் தீர்மலர்ச் சேவடி கண்டெழிற்
பவ்வங்கண்டப யோததி போலுளம்
கவ்வன்பாகிக் கலந்தக லேனென்றான். (௯௧௮)

கண்டுதாய்தந்தை காகுத்தன் குருசர்பால்
அண்டுநீ யென்றவ ரிடையொப்புவித்
துண்டுநன்மையென் றுள்ளுவந் தேகினார்
தொண்டுசெய்து தொழுதிருந் தான்மைந்தன். (௬௧௯)

பத்தி ஞானவி ராகம்பல் கிக்கருத்
துத்தியானத் தரியுறவோங்கருள்
சித்தியாகி மகாமதியாய்த்திறற்
சத்தியேய்குரு தாளிணை நீங்கலான். (௬௨௰)

தாசராற்புரி கீர்த்தனந்தா மெலாம்
நேசமாய் மனனஞ்செய்து நித்தமும்
ஆசகன்ற கதைகளு மாற்றல்கண்
டேசகன்ற குருமகிழ் வெய்தினார். (௬௨௧)

பேசுதாசரைப் பேணி நண்கெய்தினார்
பூசுரேசரும் போற்றுங்கோ சாமிகள்
வாசுதேவரனந்தர் வளர்புகழ்
மூசுமேருத்தவர் முதிர் மாதவர். (௬௨௨)

ஐவராதியனேகர் ந்ண்கெய்தினார்
எய்து காலத்தக்கா பாயினை யெழிற்
றெய்வ நாயகன்குருசர் செவேகண்டு
மெய்விராவவங்கொன்று விளம்புவார். (௬௨௩)

கல்லு முள்ளுங்கடுக்கக் கரடியும்
புல்லு மாவும் பொருந்துழிக் கேகுவேன்
ஒல்லு மோவுடனீவரற் குன்றனார்
செல்லு கென்றனர் செல்வியெதிர் சொல்வாள். (௬௨௪)

வித்தமாவி விளங்குடன் மூன்றையும்
தத்தஞ்செய்தும் வயின்சர ணெய்தினேன்.
அத்தஞ்சேரினு நும்மைய கல்கிலேன்
உத்தமக்குரு வேயென வுத்தமர். (௬௨௫)

அவளுளக்கருத் தாய்ந்துகொண் டாங்குநேர்
தவவிலாதபல் சீடருந் தாம்வரக்
குவடுநீடுமோர் குன்றடைந் தாருற
இவர்தஞ் சீடனை யங்கொளற் கெய்தினார். (௬௨௬)

சிலரிருந்தனர் தேசிகர் சேவையில்
அலர்வனத்தின்மிக் காழமு டையதாய்க்
குலவுமோர்துர வுற்றது கொள்கனை
பலவிருக்கம் பரந்துத ழைத்துள (௬௨௭)

அம்மரங்களி னூர்ந்தவி லைகடாம்
பம்மனாளும் பழுத்துதிர்ந் துற்றநீர்
செம்மலாற்புனற் சிர்கெட்ட தென்றவை
தம்மைநீக்கவெண் ணிக்கனா சார்ந்தனர். (௬௨௮)

சார்ந்திருந்துதஞ் சீடரை தாமழைத்
தார்ந்தபன்மரத் தாரிலை யாவுநீர்
சேர்ந்துதீர்ந்து புனல்கெடச் செய்தன
ஓர்ந்துநீரிதெ ழிமினெனச் சொன்னார் (கூஉங)

கேட்டசீடர் கிணற்றின் மிசைக்கிளை
நீட்டமாகி நிமிர்ந்துள தன்னதை
நாட்டடிக்கண ருக்கின்ம ரத்தடி
மாட்டமர்ந்த குருதலை மன்னுறும். (கூஉச)

நுனிகழிக்கி னுடங்குங்கி ளையுடன்
இனியநீர்த்துர வில்விழு வோமெனத்
தனிதனிக்கருத் திற்கொடு தாழ்ந்தனர்
நனியிருப்புழி நண்ணின ரூர்சென்றோர். (கூஉரு)

தருவடிக்க ணிருந்துதந் தேசிகர்
அருளுமேவலை யாற்றகில் லார்களாய்
மருவிநின்றவர் வந்தவர் தங்களில்
வெருவிலாதவம் பாஜிவி ளம்புவான். (கூஉசா)

ஏவுமேவ லியற்றப்பன் னாழிகை
மேவுமாதலின் மெய்யுணர் வீர்புனல்
நீவிராட வெழுமென நின்மலர்
தாவுமிக்கிளை தன்னைத்து ணித்தபின். (கூஉஎ)

ஆடுவேன்புன லன்றிமற் றாடலேன்
கோடுதன்னைக் குறைக்கெனக் கூறினார்
நீடுகூர்நவி யங்கொடு நீண்மரத்
தோடுறுங்கிளை யுற்றவம் பாஜியும். (கூஉஅ)

சாமிநீர்தருத் தன்னடி விட்டயல்
போமின் வெட்டுங் கிளைபொருந் தாதென
யாமிங்கன்றி யயற்செல்கி லோங்கிளை
வாமிடத்துற்று மாற்றுதி யென்றனர். (கூஉகூ)

என்றதேசிக ரேவலி யற்றுவான்
சென்றுநீள்கிளை சேர்ந்தடி யைய்த்தெறத்
துன்றுமக்கிளை யோடுநு ரவிடை
ஒன்றுநீரு ளழுந்தலுற் றனரோ. (கூஙய)

வீழ்தல்கண்டு வெருவியா வூரவெனச்
சூழ்தலாகிய சீடர்து ளங்கினோர்
ஆழ்தரும்புன லாடிய தேசிகர்
தாழ்தரும்புடை தாம்வந்து சார்ந்தனர். (கூஙக)

அக்காபாயி யமுதிடு கென்றனர்
மிக்கார்கூவ விரைந்துவந் தையரோ
புக்காழ்கிணற் றென்றுநும் புந்தியுள்
இக்காலத்தொன்று மெண்ணலி ரென்றனர். (கூஙஉ)

என்னுளந்துயர் கொண்டதிங் கென்றனள்
சொன்ன தோர்ந்து துளக்கமி றேசிகர்
அன்னவன்றனைத் தொட்டுனக் காவதென்
பொன்னனுயுனக் கேன்றுயர் போக்கென்றார். (கூகூக)

என்னலுமொன்றி யம்பலள் போனகம்
நன்னர் நல்கவெல் லாரொடு நன்குண்ட
பின்னர்வந்து சிவாஜிபெ ருந்தகை
மன்னுதேசிகர் பாதம்வ ணங்கினான். (கூசம)

வணங்கினானைக்கா பாயிவதனத்தை
இணங்கிநோக்க முகமிறங் குற்றதை
நிணங்கொள் வேலவன் கண்டுநி கழ்ந்ததென்
குணங்கொள் பைந்தொடி கூறுகென் றானரோ. (ளசக)

நங்கைமுன்னர் நடந்தவெ லாஞ்சொலச்
சங்கைகொண் டரசன் சற்குரு வின்பால்
அங்கைகூப்பிவி ளுவவச்சங்கொடு
பொங்கைமானகர் போயினன் போற்றியே (கூசஉ)

ஈதுதேர்ந்தய லூரின ரெய்தியித்
தீதுசெய்த வரைத்திறல் வேந்தனே
யாதுஞ்செய்கில னய்த்தன்பதிபுகும்
போதுநாஞ்செய்வ தேதென்று பொங்கினார். (கூஙகூ)

துரவின் மூழ்கினர் சோதிக்கக்கண்டிலர்
பரவம்பாஜியைப் பாரிடந்தின்றதோ
விரவு பொந்து விழுங்கிய தோசல
சரநுகர்ந்தன வோவென்று தாஞ்சென்றார். (கூசச)

தாசர்பின் புதந்தாசரோ டேகினார்
மூசவேறொரு மொய்பொழி லாறுநாள்
வாசமங்குவ திந்துபின் வந்தனர்
நேசனெய்துந் துரவிடை நேரவே. (கூசரு)

ஐயம்பெற்றுவந் தோரட்டுப் போனகம்
செய்ய நீளிலை சேர்த்தன ரவ்வயின்
மையல் யானைச் சிவாஜியும் வந்தனன்
மெய்யர் பாதம் விரும்பித் தொழுதனன். (கூசகா)

கண்டு நீயு முண்காட்டெங்கள் மாட்டென்று
விண்டுதாசர் விளம்பவவ் வேந்தனும்
மண்டு பந்தியில் வைகினன் பேரருள்
கொண்டு கூயினர் கூவத்தம் பாஜியை (கூசஎ)

ஏனென்றான வனைக்கவியாண நீ
தானியைந்தனை யோவெனத் தம்மரு
ளானமைந்துள னன்னபடி யென்றான்
வாநயந் தெம்வயி னெழுந்தென்றனர். (கூசஅ)

கிணறு நீங்கிக் கிளர்குரு சாமிதன்
புணரும் பொன்னடி புக்குவணங்கினன்
அணவி யாருமதி சயித்தேத்தினர்
உணவு கூர்மகிழ் வோடினி துண்டனர். (கசக)

வேணவாவினை மெய்க்குரு நீகலி
யாணமா வென்றறைந்த மொழிப்படி
ஏணதேய் கலியாண கோசாமியென்
றுணமோ டழைத்தார்க ளெல்லாருமே.

வேறு.

அன்னபோ தாண்டுச் சிவாஜி ராஜனும்
தன்னருட் குருவினை நாடிச் சார்ந்தனன்
பன்னிய பழம்படி பரிந்து பூசித்து
மன்ன மாங்கனி நிவேதனம் வகுத்தனன். (கருக)

அக்கனி களையினி தியார்க்கு நல்கிப்பின்
றக்க தென்றருந் தினர்தாமுந் தாசராய்த்
தொக்குளோர் முகங்களை நோக்கிச் சோர்விலா
திக்கடை யரசியானி யற்றவெண்ணினேன். (கருஉ)

ஆதலா லிருந்தர சியற்ற வாதனம்
மேதக வியற்றுமி னெனவி றவினோர்
மாதக வுறவவண் மண்ணிற் செய்துதந்
நாதனை யதன்மிசை நலத்திருத்தினர். (கருங)

அட்ட மந்திரிகளு மமைந்து சூழ்தரத்
தட்டறச் சதுரங்க தளமுந்தம் முளே
ஒட்டுற நியமித்தங் கொல்க நீள்கொடி
கட்டினர் மாருதி கவினத்திட்டியே. (கருச)

அரசனு லாங்கலங் காரம் யாவையும்
விரசுற நிகழ்வித்து விமலர் முன்னதாய்ப்
பரசக் காபாயியைப் பரிந்து கீர்த்தனம்
உரைசெயவு ருற்றிப்பின் வேணுபாயியும். (கருரு)

கதைசெயப் புரிந்துபின் கலந்தெல்லோர்களும்
இதையமொத்தரி திருநாம மேத்தினர்
அதையுணர் வுற்ற சிவாஜி ராஜன்மற்
றதையு மோர்கிலன் பரவசம தெய்தினன். (கருகா)

இருதின நினைவிலா திருத்த லோர்ந்துதா
சருமிவ னினைவின்றித் தங்குவா னெனில்
மருவர செங்ஙனம் வழங்கு விப்பதென்
றருளுட னுள்ளத்தி லமைய வெண்ணினர். (கருஎ)

தாவருதாச போதக் கிரந்தமொன்
றுவலிற் செயும் படிக்காரம் பித்ததை
மேவுகல் யாண கோசாமி வேண்டியங்
கோவற வெழுதவன்று தயந்தொட்டரோ. (கருஅ)

மறுதின முதய மாவதற்கு முன்னரல்
திறுதிய தாயதி லேந்தனீ திதான்
உறுவதேழ்த சகமு முதவி மன்னவன்
நிறுவுற வுள்ளத்தி னியமித்தாரரோ. (௯௫௯)

அரசன் பாராயணஞ் செய்ய லானபின்
புரைதபத்தெளிவு கூர்புந்தி பெற்றனன்
வரமரு டாசர்பின் மாறன் கீர்த்தனம்
திரமிகச் செய்து கொண்டரசுஞ் செய்தனர். (௯௬௦)

அரச னையருள் விளையாட லாடினோர்
கரையறு வேதியர்களுக்குப் போஜனம்
தரமுடன் சமைத்துப் பன்னிரண்டு வற்சரம்
விரசுற லாகவோர்தினத்தில் வேந்தனை. (௯௬௧)

பார்த்து னூர்க்கே கௌப்பணித்தி ராறென
வாய்த்துள வருடங்கட மில்வ ருத்துள
கீர்த்தியின் மிகுகுருகீதை செவ்வையின்
நீர்த்தபஞ்சீகரணமு நிரம்பவே. (௯௬௨)

அமைம நாசுலோகம் ராமாயணம் பெறக்
கமைபெறுகாவலற் கருளிவேறொரு
வெமைதரு கானகமே வக்காவலன்
செமையுறு நகரிடைச் சென்றிருந்தனன். (௯௬௩)

ஆரியர் தருமவையனைத்து நாடொறும்
சீரியதென்று பாராயணஞ்செய்து
நாரினிதுறவரு நாளின் மன்னவன்
சாரியல் புராணம் வாசிக்கச் சார்பவன். (௯௬௪)

வடமொழி வல்ல காகாவென் பண்டிதன்
அடலரசன் செய் பாராயணத்திலே
திடமிக நெடுவிரோதஞ் செய்திமையன்
மடனறு தாசரைப் பழித்து வாய்ந்துளான். (௯௬௫)

அவன வாருயுறலான நாளிலே
புவனியாளரசனிற் போந்திராமதா
சுவமையில் கீர்த்தன முரைத்து நிற்புழி
நவமிகப் பண்டிதன் கேட்டு நாடியே. (௯௬௬)

பரமவானந்தமே பரவப் பார்த்தலும்
வரமிகு தாசர் மாருதியின் வாய்ந்தனர்
அரசவைதனிலதி சயித்துப் பண்டிதன்
கரமுறக்கு வித்தவர் காலில் வீழ்ந்தனன். (௯௬௭)

விழுந்தவனெழுந்து சற்குருவை மெய்ம்மையாய்
மொழிந்தனன் பலதுதி மொழியத்தாசரும்
அழுந்துறப் புல்லியாரதி செய்தார் மலர்ச்
செழுந்திரு நாதனுக்கன்பு சேரவே. (௯௬௮)

தேவினுக்கமை பிரசாதஞ் சேர்ந்தவர்
யாவரும் பெறவினி தருளி வேந்தனுக்
கோவறு மாசிகளுரைத்துப் பின்பொரு
மாவியல் கானகமருவினாரரோ. (கூகூகூ)

வேறு

பின்பிராமதாசரன்பு பெற்ற சீடர் யாரொடும்
அன்பின்ராம நாம நன்கறைந்து கொண்டு சாம்பள்க
டென்புரங்கலந்தோர் சாரிருக்கும் வெற்பிலேறினார்
இன்பொடங்க காரமொன்றி யற்றினாரிருக்கவே. (கூஎ0)

மலையின் மீதிலந்த மாமடஞ்சிறந்து வைகிய
துலைவிலாமலின்னு மங்கனுற்றி ராமதாசர் பின்
குலைவிலாச ஹாபுரொன்னு மூர்கலந்து குறைவிலார்
நிலையதாக நீடு மாஞ்சனே யரைப்பராவினார். (கூஎக)

பகலில் ராமபஜனை செய்து பாடுதாச போதமென்
றிகலினீள் கிரந்தம் யாரு மின்பமுற்று வினவுமா
தகவினார் கல்யாணசாமி தான் படிக்க நாடொறும்
புகல்வதான கவியினைப்பு போங்கியங்கோர் வேதியன். (கூஎஉ)

தாசர் முன்புகை குவித்து நின்று சாமிதாசனேன்
பாசநீள் குடும்பவாழ்வு பற்ற நாளுநைந்துளேன்
நேசமின்றி நிக்கிறாவு நீங்குமா மனீடுகி
லேசம் யானகன்று நன்மை யெய்த நீர் செய்கென்றனன். (கூஎகூ)

என்று தானுமவனை நோக்கி யெதிர் சொலாதிராமதா
சன்று நீடு சீடரோடு மங்கோர் வாவியின் புறம்
சென்று தங்கியுடனடைந்தவவன் முகந்திரும்பி நன்
கொன்று நீள் விராகமோடு குருவுரைக் குவாயினால். (கூஎச)

உறுகுடும்பவிடர் கடத்தியெனவுரைக் கவுற்றவன்
மறுவினீர் சொல்கின்ற தெந்தவழியதேனு மருவுவேன்
சிறுமையே யெனச்சொலத் தெரிந்துதேசி கோத்தமர்
குறுகியிம் மரத்திலேறி வாவிமேவு கொம்பிலே. (கூஎரு)

வருதியென்ன வவனவாறு மரமிவர்ந்து வந்தனன்
வெருவலோடு சொன்னகொம்பின் மீதுகண்டு மெய்க்குரு
இருபதங்க ளாலினீ விடுதியென்று கூறினார்
மருவவன்கை கோடுகொண்டு கால்களால வாவிமேல். (கூஎகா)

தூங்கராம தாசர்கண்டு கோடுனைத் தொடர்ந்ததோ
ஓங்குகோடு நீதொடர்ந்து ளாய்கொலென்ன வுற்றவன்
தாங்குகோடு தன்னையே தொடர்ந்துசார்ந்து ளேனெனா
நீங்குகின்றி லாய்குடும்ப நீபிடித்திவ் வாறரோ. (கூஎஎ)

இடர்கெடுக்க வேண்டுவா யெனிற்கரங்கள் கொம்பினை
தொடர்தல்விட்டு விடுதியென்று தோமிலா ருரைத்தன
படர்விடுத்து நன்மையெய்த வந்தபாவி யிந்தநீர்
அடர்தலத்தில் வீழுவோ வடுத்ததென் றழுங்கினான். (கூஎஅ)

அவனழுங்கல் கண்டுதாச ராழ்கடற்கு ளமிழ்வுறு
திவனுயர்ந்த மலையெலா மிதப்பமுன்பி யற்றினோன்
கவலைகொண்ட நின்னைநன்கு காப்பனஞ் சிடேலெனத்
தவர்விளம்ப னம்பியங்கை தாவுகொம்பை விட்டனன். (௩௭௯)

விட்டவன் குளத்தில்வீழ்ந்து மீள்கிலா தழுந்தினான்
உட்டனாது கண்டிறந்து நோக்கவங்கொ ளூர்விராய்
வட்டமாய்வி ளங்கமற்றோர் மடுநோக்கி மற்றதில்
இட்டமான தாசபோத மினிதியம்ப நோக்கினான். (௩௮௰)

வினவவந்து ளோரையும் விராவுசீடர் பலரையும்
கனகதாரு வோடுகாம தேனுவுங்க லந்துபூ
வனமுமூசு துளவுமாவ ருக்கைவாழை யாதியா
யினவிராவு கனியும்வேண்டு வனவுமிக்க வியல்பையும். (௩௮௧)

கண்டுவந்து கனகமா மடத்தினிற் கவின்கொள்சீர்
மண்டுமா மணிப்பொனாச னத்தின்மீது வைகிய
தண்டுழாய்நி றத்திராம தாசர்தம்மை யுந்தெரிந்
தண்டுவோன் வணங்கினா னமைந்தசெம்பொ னடிகளே. (௩௮௨)

ராமதாச சாமிநீ யெனக்கு நன்மை நல்கெனக்
காமர்சே வடிக்குமுன்பு நின்றுகை குவித்தனன்
ஆமவேலை தாசருக் கருட்பிறந் தனுக்கிரகம்
தோமதேக நல்கினார் சுகக்கடற்குள் மூழ்கினான். (௮௩௩)

அன்னவேலை வாவியங் கரைக்கணே யமர்ந்தவர்
மன்னுவேதி யாகரைக்கண் வருதிநீ விரைந்தெனாச்
சொன்னவோதை கேட்டுவேதி யன்மகிழ்ந்து துரிதமாய்த்
துன்னுநீ ரகன்றுவந்து தாசர்தாள்க டொழுதனன். (௩௮௪)

தொழுதுநின்று ளோனைநோக்கி யின்னவாவி தோய்ந்தநீ
பழுதிலாம லங்கடைந்து பார்த்ததென்னை பகரென
முழுகினே னவண்டெரிந்த முறையெலோரு மறியவே
வழுவிலாது கூறியாவர் மொழிவருந்த மகிமையே. (௩௮௫)

என்றபோதி லங்கிருந்த யாவருந்தெ ரிந்துநீர்
ஒன்றவோதி னோரைநன்கு வந்துபோற்றி னார்பினர்
அன்றவண் டுறந்துதாசர் சாம்பள்கட டுத்தமா
குன்றமேறி யமரநேடு கொற்றவன்றெ ரிந்தனன் (௩௮௬)

குதிரையேறி வந்தமர்ந்த குன்றடிக்கண் வாசிமேல்
வதிதல்விட் டிறங்கியந்த மலையின்மீ திவர்ந்துபோய்
முதிர்தவத்தி னோரிருக்க முன்புகண்டு தொழுதுநின்
றதிகதாக மென்றுகையி னறியுமா றுணர்த்தினான். (௩௮௭)

அறிவதான நங்கையிங் ககப்படாது நீரிவண்
பிறிவதாயி னார்விராவு சீடர்பிச்சை பெறுவதற்
கெறிகைவேலி னையெனாமுன் யாரும்வந்து கூடினார்
செறியநீ ரிராஜனுக்கு வேண்டுமென்று செப்பினாள். (௩௮௮)

புனலகப்ப டாதுவெற்பி லென்றவேணார் புகன்றசொல்
வினவிராம தாசரிந்த வெற்பிறங்கி நீர்கொணர்ந்
தனர்கொடுக்கு மளவுமுற்ற தாகமோபொ றுக்கலான்
மனனெனக் கொடங்கொர்குச்சி கொண்டுமண்ணி லூன்றினார். (௯௮௯)

ஊன்றிடத்து நின்றுநீ ருடன்கிளர்ந்து பெருகின
தோன்றிவார் புனற்பெருக்கு கண்டுதொண்டர் யாரொடும்
ஆன்றமன்ன னுங்குடித் தருஞ்சுவைத் ததண்புனல்
என்றதென்று வருதல்செய்த தாசர்தம்மை யேத்தினார். (௯௯௰)

புனிததீர்த்த மாயதந்த நீர்ப்பெருக்கு புவனிமேல்
இனியதாகி வாருகின்ற தின்றுமந்த வின்புனல்
தனிலெலோரு மூழ்கிநன்கு சமையல் செய்து சாப்பிடத்
துனியமன்ன னூர்புகற்கு விடைசுரந்த னுப்பினார். (௯௯௧)

மன்னவன் வணங்கியேக மற்றிராம தாசர்தாம்
அன்னவெற்பி னிற்சிறு ளமர்ந்துபின்னொ ரரணியம்
துன்னலான காலமாரி சொரியதான காலமாய்
நன்னரோய்வி லாதுபெய்ய நனிநனைந்தி யாவரும். (௯௯௨)

குளிரினால் வருந்துபோது குணநலங் கொணங்கைதன்
ஒளிர்முகத்தை நோக்கியென் பசிக்குவேண்டு முணவெனத்
தெளிவிலேறு ருளைக்கவீர விறகுகொண்டு செறிமழைத்
துளிவிழாது துகில்பரப்பி முளரிசுல்லி மூட்டியே. (௯௯௩)

பாயசஞ் செய்தெழுக வென்று பசிமிகுந்த தாசரைக்
கூயபோதி லவரெனக்கில் கொஞ்சமேனும் வெம்பசி
ஆயதென்ற வண்டுறந்து மறுதினத் தொரரணியம்
போயமர்ந்தெனக்கு மிக்கபசிபுணர்ந்த தென்றனர். (௯௯௪)

பூரிசெய்தியென்று சொன்னபடிவிரைந்து பூவையும்
மாரிதன்னின் முன்பு போல்வருந்திநன் கமைத்தபின்
சீரியோரை மிசைமினென்று செப்பு போதிலென்பசி
காரிஞய காலதாமதத்தினிற் கழிந்ததே. (௯௯௫)

என்றுமற்ற நங்கைதம் மொடெய்துரூது மனம்வெறுத்
தொன்று தன்மனைக் கணேகுமாறுஞற்றவு வள்விடா
தன்று தொட்டுமிக்க வன்புகொண்டு சேவையதுசெயா
நின்றுதானு மன்னபான நீக்கி நிற்றலாயினாள். (௯௯௬)

பூமிடைந்த மற்றொரூர்காடு புக்குநேர் கல்யாணகோ
சாமிதன்னை நோக்கியிங்கொர தனுவெனக் கியற்றிநீ
தாமிடுக்க தாகவென்று தாசர்கூற நன்றெனாத்
தோமிலானும்வேயினேய்து ரோணமொன்றுநல்கினான். (௯௯௭)

கொடுமரங் கரங்கொடெங்கு முலவியாடல் கொண்டுற
அடுமடங்கல் போலும்வேந்த னஞ்சிவாஜி யருகிலே
நெடுமடங்கொ ளதிபர்வந்து நீடுகாலம் யாமெலாம்
வடுமலைந் தனுக்ரகித்து வருவதாக வழுவினாய். (௯௯௮)

பெருவனத் துலாவுகின்ற பேயனான வன்றனைக்
குருவெனக் கொடவனொ டுற்றகொடு வனத்தி லுலைகிறாய்
கருதுமெம்மை யவமதித்து நீயிவாறு காடெலாம்
மருவறீதெ னவனை மதிமயக் குறுத்தினார். (௩௯௯)

கேட்டவேந்த னொன்றுநேர் கிளத்துறா திருந்தனன்
மாட்டடர்ந்த மடநலோர்தம் வயின்விராவு சீடரைக்
காட்டடைந்தி ராமதாச னியலறிந்து கடுகுமின்
நீட்டமின்றி யெனவனோரு நேடுவானெருங்கினார். (௪௱)

வரலறிந்து தாசரங்கு மருவுபக்ஷி களையெலாம்
உரவிலா லடர்ந்துகொன்றி ராசிராசியாயுற
விரவல்செய்து கொண்டிருக்கும் வேளைவந்து கண்டுதம்
குரவர்பா லடைந்துணுற்று கொடுமைகூறி னாரரோ. (௪௱௧)

அதுதெரிந்து புரவலன்ற னருகில்வந்து வருதிநீ
சதுரனென்று பரவுகின்ற குருவின்மாடு தானெனா
முதுவர்கொண்டு பொழிலடைந்து முனைவிளங்கு தாசர்பால்
கதுவராம தாசர்சீடர் களைவிரைந்து நோக்கியே. (௪௱௨)

உண்டைவில்லி னுகுவிகங்கம் யாவுநீவி ரொருமரத்
தண்டைசேர விடுமினென்ன வவருமேவி யதுசெயக்
கண்டையா நினாதுதேசி கன்விகங்க வேட்டைபோல்
பண்டையா ரியற்றினா ரெனப்பகர்ந்து பதறியே. (௪௱௩)

அரசனோடி ராமதாச ருகடைந்து மடநலோர்
விரசுகின்ற கானிலார் விகங்கவர்க்க முயிரொலாம்
பரசநின்ற நீபடுப்ப தென்பரர்க்கு நன்மைசொற்
றிரசமாக நின்விராக மினிதுமிக்க வினியதே. (௪௱௪)

எனவிகழ்ந்த போதிராம தாசரந்த யதிகளைச்
சினமிலாது நோக்கிநன்மை தீமையான செயலெலாம்
அனகனான ராமனா லடுப்பதென் றறைந்தனர்
வினவிமா மடங்கண்மேவு மவர்விளம்பு கின்றனர். (௪௱௫)

விற்கையொன்ற நீவிகங்க வர்க்கம்யா வையுந்தடிந்
தொற்கமின்றி ராமனீது னாற்றுகின்ற தென்றனை
நிற்குநன்றி தன்றெனா நிகழ்த்தராம தாசரச்
சொற்கிணங்க விப்பவங்கள் சூழ்கிலா தியற்றினேன். (௪௱௬)

ஆதலா லறிந்தநீயி ரருள்செய்திந்த வுயிரொலாம்
சாதனீங்கு மாறுனாற்றி லெனதுபாப முந்தபும்
நீதரோ யியற்றுகென்ன வவர்முனிந்து நீதியில்
பாதகாநீ சொல்வதென்னை பரமரானு மியலுமோ. (௪௱௭)

எளிதஞ்செய் தெமையியம்பு மிதுதகாத தென்றலும்
காளியன்றன் மீதிலாடு கண்ணனன்பர் கடுகியே
மீளிமொய்ம்பி னரசைநோக்கி விறகுதேடி வாவெனக்
கோளின்மன்ன னதுசெயக் கொளுத்தியக் கினிக்கணே. (௪௱௮)

பக்கியைப் படுக்கவின் பறந்துபோன தொன்றுபோல்
அக்கினிக்கணிதெலானவவை யெலாம கன்று வின்
புக்கிடத் தெளிந்து நின்ற புரவலன்றன் முன்புசார்
தொக்கினத்தர் நாணியஞ்சி முடிகவிழ்ந்து சொல்லுவார். (௪௱௯)

உயர்த வத்துளீரியற்றுமு மது மெய்ம்மை தேர்கிலோம்
அயர் வடுப்பொறுத்தல் வேண்டு மெனவணங்கி யருள் பெறீஇ
இயலிடத்து மேவினார் பின் விடை கொடேந்தலேகினான்
முயல் வனத்து மேவு சீடர் பலருமின் பின் மூழ்கினார். (௪௱௰)

வேறு

புண்ணியதல மென்றேத்தப் பொருந்து கோலாபூர் வாழ்வு
நண்ணு வேதியனொருத்தன் ராமதாசிடத்தில் வந்து
பண்ணி வந்தன நின்றேத்திப் பரமசற்குருவே யான்வாழ்
வண்ணியவூரிற் சத்தியுபாசனை மலிவதாகி. (௪௰௧)

யாவராயினும் மங்கெய்தி ராமநாமஞ் சொல்வாரேல்
ஆவிபோங்காலத்தோது மதனை யேனுரைப்ப தென்று
நாவினாற்சொல வொட்டாமனலி வரிங்கிதனுக்கேது
நீவிர் செய்கின்ற தென்று நிகழ்த்திடக் கேட்டுத்தாசர். (௪௰௨)

நகைபுரிந்தவ்வூர் நண்ணி ராமநாமத்தை யாரும்
வகை வகையாகக் கேட்க வழுத்திக் கீர்த்தனங்கள் பாடித்
தகைபெறு மன்பு சான்று தனித்தனிய வசராகித்
தொகை தொகையாக ராமநாமமே சொலுமாசெய்து. (௪௰௩)

அங்கு நின்றியல் கர்ஹாடென்றறையு மத்தேசஞ்சென்று
தங்கி நாடோறும் ராமநாம கீர்த்தனங்கள் சாற்றப்
பொங்கிய வூராரெல்லாம் போந்துள மகிழ்ந்து கேட்டு
மங்கலம் பொலியச் சில்லோர் மனம்பரி சுத்தராகி. (௪௰௪)

சரணடைந்தேத்த வன்னார் தமக்குபதேசஞ்செய்து
வரலுறு நாளிலவ்வூர் மருவிய பாண்டியாத்தான்
தரவரு புதல்வி மிக்கவிளமைசால் கயினி தன்பேர்
விரகறி வேணுபாயி மேவிக் கீர்த்தனங்கள் கேட்டு. (௪௰௫)

தாவிலன் புளத்திற்கொண்டு தாசரை வணங்கிப் போற்றி
மேவியகரண மூன்று மிகப்பரி சுத்தையாகி
மாவிரதியரே யென்பால் வளரருள் சுரந்திப்போது
நீவிரேயனுக்ரகிக்கவேண்டு மென்றிரந்து நின்றாள். (௪௰௬)

அவளது சத்பாவத்தை யறிந்து நீமறை வல்லோர்க்குத்
தவலரும் போஜனஞ் செய்கென மகிழ் தாசர்கூற
உவமையில்லவளுந் தாசரோதிய படிக்கமைத்து
நவரசம் பொலியராம நாமஞ்சொல் வோரைக்கூவி. (௪௰௭)

கொண்டுபோயு பரிகைக்கட் கோதிலாதனத்திருத்தி
மண்டுசோட சோபசார வகையெலாம் புரியத்தாசர்
அண்டுறு மவளுக்கின் பாயனுக்கிரகித்தா ராங்கே
உண்டுறவாத சேவை யுன்னினருளச்சின் மன்றே. (௪௰௮)

அஞ்சனைச் சிறுவருன்னு மளவையிற் சகுணரூபம்
எஞ்சலில்லாது தோன்ற வெதிர்ந்தனரிருக்க நேரே
வஞ்சி நேரிடையாளன்னங்கறி பரிமாற வந்து
செஞ்சுடரவன் மாணுக்கர் தேசுகண்டயர்ந்து வீழ்ந்தாள். (௪௱௯)

வீழ்கலுந் தாசர் தாங்கி வெருவினள் கரங்கைக் கொண்டு
மாழ்கினண் முகத்தை நோக்கி வஞ்சி நீ யெதனைக்கண்டு
சூழ்காலானையச் சஞ்சொல் கென வேணுபாயி
வாழ்வருள் குருவே தேஜோமயத் தொருபுருடர் தம்மை. (௪௱௰)

வாலுடன் சுவணமாக வயங்கு கோவணமும் பூணு
நூலு நன்கொளிரக்கண்டு நோக்கங் கூசுதலாயஞ்சி
மேலு பரிகையில் வீழ்ந்தே னெனவிளம்புதலுந் தாசர்
கோலு மென் சீடர் தம்மிலொருவருங் கோடை சேயை. (௪௱௰௧)

கண்டிலர் நீ கண்ணாரக் கண்டனை யிதனனீதான்
கொண்ட பாக்கியமே பாக்கியம் பெரிதென்று கூறி
மண்டுறக் கொண்டு வந்த வகையெலாம் வாயுமைந்தர்
உண்டிடப் பரிமாறென்றங் குவள்பரி மாறச்செய்து. (௪௱௰௨)

மாருதியருள் செய்துண்டு மறைந்த பின் மிகுந்ததுண்டு
நேருண மிசைந்துமோடு நிறைந்த வேதியருக் கெல்லாம்
ருடன் சாந்துந்தாம்பூல முந்தக்கணையு நன்கீயக்
ரு நல்லருள் சுரந்து பின்பு முந்நாட்குலாவி. (௪௱௰௩)

ஹரிதிரு நாமகீர்த்தனங்கள் செய்தருளைப் பெற்ற
தெரிவை மற்றறிவுருமற் செறிவுறும் பழுவஞ் சேர்ந்தார்
பரிவுறுஞ் சீடரோடு படர்வறி வேணுபாயி
பிரிவினுக் கிரங்கித் தாசர்பாற் செல்வோர்பின்பு சென்றாள் (௪௱௰௪)

தேசிகர் தமைக்கண்டன்னார் திருவடி வணங்கி யைய
தாசியாய் நும்பாற்றனே சார்ந்தினி திருப்பே னென்ன
மாசிலார் நோக்கி நீயோ வனிதையிற் சிறுமி யாதல்
ஏசில்யா னுலவுங் கானமெங்கணும் வரலாகாது. (௪௱௰௫)

உன்னிடத் தருளால் யான்சொல்லுவதை நீயுறுதியாக
நின்னுளந் தனிற்கொண்டேகி நிகேதனத் திருந்துநாளும்
மின்னு கோதண்டபாணி விமைமலரடியைச் சிந்தித்
தன்னவ னுமமோதிய மர்தியென்றனுப்பச் சென்றாள். (௪௱௰௬)

தாசர் தம்முரை மறாது தான்மனை சார்ந்து நாளும்.
நேசமோட மலராமனினை வுடனிருந்தாள் பின்பு
மாசறு சஹாபூர் தாசர் வந்தது தெரிந்து சென்று
காசறு தாசர் செய்யுங்கதை விஞய்த்தன்னார் சென்றாள். (௪௱௰௭)

சென்றனவ ளிருக்கக் காந்தன்றனைப் பெறுதிறலோன் றேர்ந்து
நன்றல துனது செல்வி நடக்கை யென்ற வடந்தைக்குக்
கன்று தலாகக் கூறக் கடிதுதன் மகளைக் கூவி
உன்றன தியற்கை யூரர் திரிவதோவெனவுடன்றான். (௪௱௰௮)

தாயுமவ்வாறு தன்பாற் சலித்தெதி ருரைக்கவேணு
பாயி யென்றனக்கு வாய்த்த பதியிறந்ததனு லன்றோ
மீயுயர் கதியை வேண்டி விமலசற்குருவைப் போற்ற
லாயின ளிதனுலே துபழியுள தாகாதென்றாள். (௪௨௯)

தந்தைதாய் மகள் சொல்வார்த்தை தனக்கிசை யாதுசால
நிந்தையா மூன்று லெங்கட் கெனமகணி ராகரித்தென்
சிந்தையில் விளங்கும் ராமனேதந்தை சீதையே தாய்
முந்தையே யெனவுட் கொண்டேனு மக்கென்னை மொழிவ தென்றாள். (௪௩௰)

அன்னது கேட்டதாயு மப்பனுமி வளிப்போதியாம்
சொன்னதற் கிசைவுறா தாற்றுணிந்து கொல்வது நன்றென்று
துன்னு தற்கரிய நஞ்சூண்டெய்த்திறக் கொடுத்தாருண்டு
நன்னுதன் மயங்கித் தேர்ந்து நயந்து சற்குருவை யெண்ணி (௪௩௧)

இப்பொழு தெனக்கபாய மியைந்ததா லெதிர்ந்து நீரோ
தப்பறக் காக்கவேண்டு மெனமனந் தளர்ந் திறந்தாள்
அப்பமு தறிந்து தாசராங்குவந் தருளிஞேக்க
வெப்பகன்று யிருண்டாகி விழித்தெதிர் குருவைப் பார்த்தாள். (௪௩௨)

உடனெழுந்தவர் தம்பாத முவந்து சேவித்துச்சாமி
விடநுங்கி யிறக்கச் செய்ததாய் தந்தை வேண்டா ரன்றோ
மடனென்று மவரை நீங்கி நுமக்கியான் வழிபாடாற்றல்
கடனென்று தொடர்ந்து சாம்பள் காட்டெனு நகரஞ் சார்ந்தாள். (௪௩௩)

வசதி யுற்றிருந்த ராமதாசர் பால்மருவுஞ் சீடர்
முசளருத்திர ராமாஜிமுது நலத்தேவதாச
ஜசவந்தி வாகரப் பானுஜி யெனத்தகு கோசாமி
இசைவுறும் பெயரிஞே ராதியர் சிலர்க்கினிமை கூறி (௪௩௪)

தந்த மூரணுகச் செய்து தாமள காவதிக்கு
வந்தனர் நீங்குறா மன் மருவுறுஞ் சீடரோடும்
இந்திராயணி நீராடி யேத்தரு ஞான தேவர்
சுந்தர சமாதிக்கெய்தித் தொழுதவர் தமைப்பூசித்து (௪௩௫)

மூன்றிராவ வணிற்றங்கி முயலரிகீர்த்தனங்கள்
சான்றவர் வினவப்பாடிச் சார்ந்தனர் கங்காதீரத்
தான்றமை பேகநாத ரடிநிலே யமைத்து நாளும்
தோன் றரசெனும் விருக்கந் துன்னினர் தொழுது வாழ்த்தி (௪௩௬)

அங்குமூன் றிரவிராம கதைகளை யருளிச் செய்யத்
தங்குமவ் வேகநாதர் தாசர்முன் னெதிர்ந்துதோன்றிப்
பொங்கு மானந்தத்தோடு புல்லினர் விடையுநல்க
எங்கு நீடவரங் காபாத்தெனு நகரதனைச் சேர்ந்தார். (௪௩௭)

நண்ணலு மாங்கிராமி ராமதாசெனு நல்லோராம்
அண்ணனுர் சீடரோடு மணுகக்கண்டவரைப் போற்றி
எண்ணரு மவ்வூர் நீங்கியேகும் போதினிற்சிவூர்வாழ்
புண்ணியப் பயிஞபாயி புனிதர் செய்கதையைக்கேட்டு. (௪௩௮)

